

# விருந்து

சதுரங்கா சொன்னார்:

நான் கிராமத்திலிருந்து மைசூருக்குத் திரும்பி வந்து விட்டேன். என் கல்லூரிப் படிப்பு முடிந்த நாளில் இருந்தே நான் மைசூரில் தங்குவது மிகவும் குறைந்து விட்டது. இருந்தாலும் எல்லோரும் என்னை மைசூர்வாசி என்றுதான் அடையாளம் கூறுவார்கள். என்னையே 'நீ எங்கிருந்து வருகிறாய்?' என்று யாராவது கேட்டால் உடனே 'மைசூர்' என்றுதான் பதில் தருவேன்.

என் திருமணம்—உனக்குத்தான் தெரியுமே, அதன் முழு விவரங்களும்—என்னை நகரத்தில் இருந்து முப்பது குடும்பங்களே வாழும் ஒரு குக்கிராமத்துக்கு விரட்டியது. என்னை மைசூரில் எல்லாரும் மறந்துவிட்ட பின், பத்தாண்டுகளுக்குப் பிறகு, நான் மீண்டும் மைசூர் திரும்பினேன்.

நானேதான் வீடு பார்த்துக்கொள்ள வேண்டியிருந்தது. அரண்மனை போல இருந்த குடும்ப வீடுகள் எல்லாம் கைமாறி விட்டன. என் சகோதரர்கள்கூட மைசூர் நகரைவிட்டு வேறிடங் களுக்குப் போய்விட்டார்கள். பள்ளி நண்பன் ஒருவனைக் கூட அழைத்துக்கொண்டு ஊருக்குச் சற்றுத் தள்ளிப் புதிதாகக் கட்டப் பட்ட வீடுகளில் ஒன்றை வாடகைக்குப் பெற முயற்சி செய்தேன்.

நான் கிராமத்திலிருந்து வந்தேன் என்றதால் ஒருவர் மறுத்து விட்டார். நான் உள்ளூர்க்காரன் என்று சொன்னதற்கு ஓர் அம்மாள் அவநம்பிக்கைத் தோன்ற, 'அடுத்த வாரம் பார்க்க லாம்' என்று சொல்லிவிட்டாள்.

இன்னொரு வீட்டுக்காரர் மாதச் சம்பளக்காரர்களுக்குத் தான் வாடகைக்கு விட முடியும் என்று கூறிவிட்டார். ஒருவர் தன் தம்பி அந்த இடம் வேண்டுமென்று முன்பு சொன்னதாகவும்,

அவன் தேவையில்லை என்று கூறிவிட்டால் எனக்குத் தருவதாகவும் சொன்னார்.

அவர் தம்பி ஆல் இந்தியா ரேடியோவில் இருப்பதாக அவரே சொன்னதன் பேரில் நானும் என் நண்பனும் அந்த நபரையே நேரில் போய்க் கேட்டு விடலாம் என்று தீர்மானித்தோம்.

உலகத்திலேயே மைசூர் ரேடியோ நிலையம் போல ஒரு கட்டிடப் புதிர் வேறொன்று இருக்கமுடியாது. ஏதோ ஆரம்ப கால உற்சாகத்தில் மூலை முடுக்கு என்று கண்டுகொள்ள முடியாதபடி ஒரே வளைவாக அதைக் கட்டிவிட்டார்கள். வளைவு வராந்தாக் களில் சுற்றிச் சுற்றி வந்து எப்படியோ நாங்கள் தேடி வந்த நபரின் அறையைக் கண்டு பிடித்து விட்டோம். எவர் யார் என்று தெரியாமல் அங்கே கண்டவர்களை எல்லாம், 'நீங்கள் புது வீட்டுக்குக் குடி போகப் போகிறீர்களா?' என்று கேட்டோம், யாரும் 'ஆமாம்' என்று பதில் தரவில்லை.

அதன் பிறகு, 'உங்கள் சகோதரர் புது வீடு கட்டிக் கொண் டிருக்கிறார்' என்று விசாரித்தோம். ஒருவருக்குக் கோபம் வந்து, 'வெளியே போ' என்றார். என்ன கதை எழுதத் தெரிந்து என்ன பிரயோசனம்? 'வாடா சதுரங்கா, நாம் வேறெங்காவது வீடு தேடிப் போகலாம்' என்று என் நண்பன் சொன்னான். அப்போது அங்கிருந்தவர்களில் ஒருவன் தலைநிமிர்ந்தது.

"யார் சதுரங்கா?" என்று அவன் கேட்டான்.

"நானேதான்" என்றேன்.

"பரிமள சௌபாக்யா' ஆசிரியரா?" என்று கேட்டான்.

"ஆமாம்."

அவன் எழுந்து வந்து என் கையைப் பிடித்துக் கொண்டான். "நான் உங்களை வெகு நாட்களாகச் சந்திக்க வேண்டும் என்று இருக்கிறேன்" என்றான்.

"அப்படியா?" என்றேன்.

"உங்கள் நாவலைப் படித்துவிட்டுத்தான் எனக்குப் பிறந்த இரட்டைப் பெண்களுக்குப் பரிமளா சௌபாக்யா என்று பெயர் வைத்தேன். என் பெயர் கிருஷ்ணமூர்த்தி" என்றான்.

"அப்படியா?" என்றேன்.

"நீங்கள் எங்கோ மைசூரை விட்டே போய் விட்டதாகச் சொன்னார்களே?"

"திரும்பி வந்து விட்டேன்."

"எங்கு இருக்கிறீர்கள்?"

"பரிமளா லாட்ஜில்."

"ஓகோகோ, அதற்குத்தான் அந்தப் பெயரை நாவலுக்கு வைத்தீர்களா?"

"அதெல்லாம் இல்லை. அங்கேதான் அறை வாடகை சற்று மலிவு."

"வாடகை அறையிலா இருக்கிறீர்கள்? ஆமாம். எழுத்தாளர் களுக்குத் தனிமை வேண்டும்."

"அதெல்லாம் இல்லை. என் மனைவியும் குழந்தையும்கூட அதே அறையில்தான் இருக்கிறார்கள், வீடு பார்த்துக் கொண்டி ருக்கிறேன்."

"என் அண்ணா வீடு கட்டிக் கொண்டிருக்கிறார். அதைப் பார்க்கலாமா?"

"வீடு எங்கே இருக்கிறது?"

அவன் சொன்னான். அவனேதான் சற்று முன்பு அவனுக்கு அண்ணாவும் கிடையாது, வீடு ஏதும் மாற்றுவதாக உத்தேசமும் இல்லை என்றும் சொல்லியிருந்தான். எப்படியோ எனக்கு வீடு கிடைத்துவிட்டது.

வீட்டுக்காரர் கூட என்னை மாதமொரு முறைதான் வந்து பார்ப்பார். ஆனால் கிருஷ்ணமூர்த்தி அநேகமாகத் தினமும் என்னைச் சந்திக்க வருவான். ஏதாவது ஒரு காரணம் சொல்லி ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையன்றும் அவன் வீட்டுக்கு அழைத்துப் போய், என் கையை நனைக்க விடாமல் திரும்பிப் போகவிட மாட்டான்.

அவனுடைய மனைவி கேரளப் பகுதியைச் சேர்ந்தவள். ஒவ்வொரு முறையும் புதிதாக ஒன்றைச் சமைத்துப் பரி மாறுவாள். விருந்தோம்பலில் கணவன் மனைவி இருவரும் சற்றும் சளைத்தவர்கள் இல்லை. நான் 'போதும் போதும்' என்று எவ்வளவு சொன்னாலும் இலை நிறையப் பரிமாறி எனக்கு மூச்சு முட்ட வைத்து விடுவார்கள். ஒவ்வொரு முறையும் 'சமையல் எப்படி? கூட்டு சரியாயிருக்கிறதா? உருளைக் கிழங்குக்குக் காரம் அதிகமோ?' என்று விசாரிப்பார்கள்.

நான், 'பிரமாதம்! பிரமாதம்!' என்பேன். உடனே கிருஷ்ண மூர்த்தி, 'ஆமாம், எதைப் போட்டாலும் பிரமாதம் என்று சதுரங்கா கூறிவிடுவார். உலகத்திலேயே மிக எளிதாகத் திருப்திப் பட்டு விடுபவர் நம் சார் ஆகத்தான் இருக்க வேண்டும்'' என்பான்.

“இல்லையப்பா, உன் மனைவி சமையலில் பரிமள சௌபாக்யம் ஒரு வேளைகூடத் தவறுவது இல்லை.”

“சார் கதை எழுதுகிறவர்தானே, அதான் எப்போதுமே கதைவிடுகிறார்.”

கிருஷ்ணமூர்த்தி வீட்டுச் சமையல் பற்றிக் கதைவிடத் தேவையே இல்லை. அந்தக் கேரளப்பகுதிப் பெண் அவ்வளவு அற்புதமாகச் சமைப்பாள்.

இவ்வளவு நன்றாகச் சமைத்து இவ்வளவு அன்புடன் பரிமாறி என் மிகச் சாதாரணப் பாராட்டைக்கூட இப்படி உதறித் தள்ளி விடுகிறார்களே என்று எனக்கு வருத்தமாகவே இருந்தது.

நான் இன்னொரு நாவலைப் பாதி முடித்திருந்தபோது என் உறவுக்காரர் ஒருவர் திடீரென்று என் வீட்டுக்கு வந்து, “பரிமள சௌபாக்யா’வை சினிமாவாக எடுக்க முடிவு செய்திருப்பதாகச் சொன்னார். இந்த மாதிரி சொல்லி வருபவர்கள் நம்மிடம் இல்லாத எதிர்பார்ப்புகளை உண்டு பண்ணிவிட்டு அப்புறம் காற்றோடு மறைந்து போய்விடுவார்கள். நாமும் நம் ஏமாற்றங்களுந்தான் மிஞ்சும். ஆதலால் நான் பெரிதாக உற்சாகம் காட்டவில்லை. ஆனால் அந்த மனிதர் அடுத்த நாள் ஆயிரம் ரூபாய் கொண்டு வந்து கொடுத்தார்.

அதற்கு அடுத்த வாரம் என்னை சென்னைக்கு அழைத்துக் கொண்டு போனார். அதற்கடுத்த வாரம் காமிராவுக்கு முன்புறம் எது என்று அவ்வளவு நிச்சயமாகத் தெரியாத நான் ‘பரிமள சௌபாக்யா’ திரைப்படத்துக்கு டைரக்டராக மாறியிருந்தேன்.

எந்தக் கிராமத்தில் ஒரு நெருக்கடி காலத்தில் நான் தஞ்சம் அடைந்தேனோ, எந்தக் கிராமத்தை நான் மீண்டும் விழியெடுத்துப் பார்க்கமாட்டேன் என்று விலகி வந்தேனோ அதே கிராமத்துக்குச் சினிமா எடுப்பதற்காக நான் இருபத்தேழு பேரை அழைத்துக்கொண்டு போய்ச் சேர்ந்தேன். நான் சினிமா எடுப்பதை அக்கம் பக்கத்துக் கிராமத்துக்காரர்கள் எல்லாம் வண்டி கட்டிக்கொண்டு வந்து வேடிக்கை பார்த்தார்கள். சினிமா எடுப்பது பற்றிக் கொஞ்சம் தெரிந்தவர்களாக இருந்தால் வேடிக்கை இன்னும் அதிகமாக இருக்கும்.

நான் தட்டுத் தடுமாறுவதை எல்லாம் அவர்கள் ஏதோ அற்புத நிகழ்ச்சியாக வாய் பிளந்து வியந்தார்கள். என்னுடைய வியப்பு, என்னையும் மீறி சினிமா ஒரு மாதிரியாக உருவாகியிருந்தது.

சினிமா விஷயம் அப்புறம். நான் திரும்ப மைசூர் வந்து சில மணி நேரத்துக்குள் கிருஷ்ணமூர்த்தி வீட்டுக்கு வந்துவிட்டான். "என்ன கதா சாகரரே, சொல்லாமல் கொள்ளாமல் எங்கோ போய் விட்டீர்? ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் உம்மை வந்து தேடி விட்டுப்போனேன். எப்போது சாப்பிட வரப்போகிறீர்கள்?" என்று கேட்டான்.

எனக்கு ஆச்சரியமாக இருந்தது. இவ்வளவு நாட்கள் எங்கே போனாய், என்ன செய்தாய் என்று கூடக் கேட்காமல் எப்போது சாப்பிட வரப் போகிறாய் என்று கேட்கிறானே, இவன் என்னை என்னவென்று நினைத்துக் கொண்டிருக்கிறான் என்று ஒரு கணம் கோபம்கூடத் தோன்றிற்று. ஆனால் கிருஷ்ணமூர்த்தியின் முகத்திலிருந்த எளிமையான பாவம் என் கோபத்தை ஒரே அடி—யாக அமுத்திப் புதைத்து விட்டது.

"இந்த ஞாயிற்றுக்கிழமை வருகிறேன். நிறையத் தேங்காயும் தயிரும்விட்டு ஏகப்பட்ட காய்கறிகளைப் போட்டு ஏதோ கூட்டு மாதிரி ஒன்று உன் மனைவி சமைப்பாளே, அது என்ன?" என்று கேட்டான்.

"அவியலைச் சொல்கிறீர்களா?"

"ஆமாம், ஆமாம். அவியல். எனக்கு அவியல் வேண்டும்."

"கதா சாகரருக்கு இல்லாததா? கட்டாயம் அவியல் செய்யச் சொல்கிறேன். ஆனால், உங்களுக்கு என்ன பரிமாறினால் என்ன? எல்லாவற்றையும் பிரமாதம், பிரமாதம் என்று கூறி விடுவீர்கள்!"

"இந்த ஞாயிற்றுக்கிழமையும் பிரமாதமாகச் சமைத்து வைக்கச் சொல்லு. நான் பத்து மணிக்கே வந்து விடுகிறேன்."

"வீட்டில் எல்லாரையும் அழைத்துக்கொண்டு வாருங்கள்."

"என் மனைவிக்கு எப்போதுமே பத்தியச் சாப்பாடு. நான் வருகிறேன். என்னைத் திருப்திப் படுத்து."

"கதா சாகரரைத் திருப்திப் படுத்த விசேஷமாக ஒன்றுமே தேவையில்லை. எதைப் போட்டாலும் பிரமாதம், பிரமாதம் என்று சொல்லிவிடுவார்."

இந்த ஞாயிற்றுக்கிழமை மட்டும் நான் கிருஷ்ணமூர்த்தி வீட்டு விருந்து பற்றிக் கவனக் குறைவாக இல்லை. பார்க்கப் போனால் சனிக்கிழமை இரவிலிருந்தே விருந்து நினைவாக இருந்தேன். ஞாயிற்றுக்கிழமை காலை எட்டு மணியிலிருந்தே என் உடலும் மனமும் பதற்ற நிலையில் இருந்தன.

ஒன்பது மணியளவில் சினிமாக்காரர்கள் வந்தார்கள். பத்தே நிமிடம் வேலை. அதை முடித்த பிறகு அவர்களில் ஒருவரை மட்டும் காருடன் சிறிது நேரம் காத்திருக்கச் சொன்னேன். சரியாகப் பத்து மணிக்கு, "என்னை 'ஆல் இண்டியா ரேடியோ' கிருஷ்ணமூர்த்தி வீட்டில் விட்டுவிடு" என்றேன்.

கிருஷ்ணமூர்த்தியும் அவனுடைய மனைவியும் அன்பாக என்னை வரவேற்றார்கள். நான் அங்கே போய்ச் சேர்ந்து இரு நிமிடங்களுக்கு எல்லாம் இரட்டைப் பெண்களில் ஒருத்தியான பரிமளா எனக்குக் காபி கொண்டு வந்து கொடுத்தாள். ஒரு வாய்விட்டுக் கொண்டேன். "கிருஷ்ணமூர்த்தி, உன் வீட்டில் தேவதை யாராவது ஒத்தாசை புரிகிறார்களா?"என்று கேட்டேன்.

"என்ன கதா சாகரரே, ஒரேயடியாகப் பரிகாசம் புரிகிறீர்?"

"பரிகாசமா? காபியை இவ்வளவு அற்புதமாகத் தயாரிக்க முடியுமா?"

"ஒன்றும் ஸ்பெஷல் இல்லை, சார். எப்போதும் போலத் தான் தயாரித்திருப்பாள்."

"நீ ஒரு வாய் விட்டுக் கொண்டு பார்."

கிருஷ்ணமூர்த்தி என் தம்ளரை வாங்கிச் சிறிது காபியைத் தன் வாயில் விட்டுக் கொண்டான். "இது என்ன காபி, சார்? ரொம்பச் சாதாரணம்" என்றான்.

எனக்கு அவனை அடித்துவிட வேண்டும்போல இருந்தது. காபி வடிவில் (?) அமிருதம் இருக்க முடியுமானால் — நான் அந்த நேரம் கையில் அமிருதம் வைத்துக் கொண்டிருந்தேன் — காபி அவ்வளவு பக்குவமாக இருந்தது.

"கதா சாகரருக்கு ரொம்ப இளகின மனசு. எதைக் கொடுத் தாலும் ரொம்ப நன்றாக இருக்கிறது என்று கூறிவிடுவார்."

என்னை எப்படி அடக்கிக் கொண்டேன் என்று எனக்கே வியப்பாக இருக்கிறது. வெகுநேரம் பேசிக் கொண்டிருந்ததில் தான் அந்தப் படபடப்புச் சிறிது குறைந்தது.

ஒரு மணிக்குக் கிருஷ்ணமூர்த்தியின் இரு பெண்களும் எங்களிடம் வந்தார்கள். "சாப்பிட வாருங்கள்" என்று அழைத் தார்கள்.

சமையலறையிலேயே எங்கள் இருவருக்கும் இலை போடப் பட்டிருந்தது. கிருஷ்ணமூர்த்தியின் மனைவி பரிமாற ஆரம் பித்தாள்.

பாயசம், தயிர்ப்பச்சடி, இனிப்புப்பச்சடி, ஒரு கறி, இரண்டாவது கறி, வறுவல், துவையல், அவியல்...

"சாருக்கு அவியல் இன்னும் கொஞ்சம் போடு."

"நான் அப்புறமாகக் கேட்டு வாங்கிப் போட்டுக் கொள்கிறேன், கிருஷ்ணமூர்த்தி. இலையில் இப்போது இடம் இல்லை."

"வயிற்றில் இடம் வைத்துக் கொள்ளுங்கள், கதா சாகரரே."

சாதமும் பரிமாறி நெய்யும் விடப்பட்டது. கிருஷ்ணமூர்த்தி மலர்ச்சியுடன் நான் சாப்பிடத் தொடங்குவதற்காகக் காத்திருந்தான். நான் சாதத்தில் நெய்யும் பருப்பும் கலந்து பிசைந்தேன். சம்பிரதாயப்படி முதலில் பாயசத்தைத்தான் சாப்பிட வேண்டும். ஆனால் நான் ஆள் காட்டி விரலால் சிறிது அவியல் எடுத்து வாயில் போட்டுக் கொண்டேன். கிருஷ்ணமூர்த்தி என் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். சாம்பார் எடுத்து வந்த அவன் மனைவியும் காத்துக் கொண்டிருந்தாள்.

நான் ஒரு கணம் யோசிப்பது போலத் தாமதித்தேன். இன்னொரு முறை விரலால் அவியலை எடுத்து வாயில் போட்டுக் கொண்டேன். ஒரு முடிவுக்கு வந்தமாதிரி கிருஷ்ணமூர்த்தியைப் பார்த்தேன்.

"என்ன சார்?" என்று அவன் கேட்டான்.

"அவியலுக்குக் கொஞ்சம் உப்பு..."

நான் சொல்ல வந்ததைச் சொல்லி முடிக்கவில்லை. கிருஷ்ணமூர்த்தியின் மனைவிக்கு ஒரேயடியாக வேர்த்துவிட்டது. கை கால் உதறத் தொடங்கிவிட்டது. அவளால் நிற்க முடியாது போல இருந்தது. கையில் இருந்த சாம்பார் பாத்திரம் கீழே விழுந்து விடுமோவென்று பயமாக இருந்தது. அவளே அதைக் கீழே வைத்துவிட்டாள்.

கிருஷ்ணமூர்த்தி முகம் சிவந்து போய்விட்டது. கண்கள் புடைத்து வெளியே பிதுங்கி விழுந்துவிடும் போல் இருந்தன. பற்களைக் கிட்டித்துக் கொண்டான். மனைவியைக் கொடூரமான பார்வை பார்த்தான். "சண்டாளி! கழுதை! என்ன சமையல் பண்ணியிருக்கேடீ! உன் மனசிலே என்ன இருக்கு? சாதாரணமா வர விருந்தாளியா சார்? இப்படிச் சமையலைப் பாழ் பண்ணி விட்டியேடீ! சரி பண்ணிக்கொண்டு வாடீ, படுபாவி!" என்று சொன்னான். ஒருவன் சொற்களை இவ்வளவு திகிலூட்டும் படி—யாகப் பயன்படுத்தி நான் அறிந்தது இல்லை. அவன் மூச்சுவிட்டது,

அவன் முன்னால் இருந்த இலையைப் பறக்க அடித்துவிடும் போல் இருந்தது.

பரிமளாவும் சௌபாக்யாவும் இரத்தமெல்லாம் சுண்டி ஒரு மூலையில் அரண்டு போய் ஒடுங்கிக் கிடந்தார்கள். கை கால் உடல் நடுக்கத்தில் கிருஷ்ணமூர்த்தியின் மனைவி தொட்ட பாத்திரங்கள்கூடக் கடகடவென்று ஒலி எழுப்பின.

கிருஷ்ணமூர்த்தியின் மூச்சும் அந்தப் பாத்திர சப்தத்தையும் தவிர அந்த அறையில் என்று மட்டுமில்லை, பிரபஞ்சத்திலேயே வேறு ஒலியே கிடையாது என்பது போல நிசப்தமாக இருந்தது.

சில நிமிடங்கள் யுகமாகச் சென்றன. கிருஷ்ணமூர்த்தி முதல் முறையாக இலையில் கை வைத்துச் சிறிது அவியலைத் தன் வாயில் போட்டுக் கொண்டான். சிறிது தாமதித்து மீண்டும் எடுத்துச் சுவைத்துப் பார்த்தான். அவனுடைய மனைவி, அவனுடைய இரு பெண்கள் எல்லாரும் திகில் கலந்த எதிர் பார்ப்புடன் அவனையே பார்த்த வண்ணம் இருந்தார்கள்.

கிருஷ்ணமூர்த்தி என்னைப் பார்த்தான், சந்தேகத்தோடு. "உப்பு குறைவா, அதிகமா?" என்று கேட்டான்.

"உனக்கு எப்படி இருக்கிறது?" என்று கேட்டேன்.

"சரியா இருப்பது போல் இருக்கிறதே?" என்றான்.

கிருஷ்ணமூர்த்தியுடைய மனைவி சற்று ஆசுவாசம் அடைந்தவளாக நின்றாள்.

"ஆமாம், சரியாகத்தான் இருக்கிறது. அற்புதமாக இருக் கிறது" என்றேன். அறையில் சற்று முன் நிலவிய பீதியும் துன்பமும் விலகிப் போய்விட்டன. ஆனால் கிருஷ்ணமூர்த்தி சகஜநிலை அடையவில்லை. என்னைச் சந்தேகத்துடனேயே பார்த்தான்.

நான் உற்சாகமாகச் சாப்பிட ஆரம்பித்தேன். கிருஷ்ண மூர்த்தியுடைய மனைவி மௌனமாகப் பரிமாறினாள். கிருஷ்ண மூர்த்தி மட்டும் நிலை குலைந்தே இருந்தான். உணவை ஒழுங் காக எடுத்து வாயில் போட்டுக்கொள்ள முடியாமல் அவன் உடை எல்லாமும் அவனைச் சுற்றியும் சோறாகக் கிடந்தது. ஒரு வழியாகச் சாப்பாடு முடிந்தது.

விதி விலக்கில்லாமல் எல்லாப் பண்ட பதார்த்தமும் மிகவும் சிறப்பாக இருந்தன. ஆனால் அன்று அங்கு யாரும் எதையும் ரசித்திருக்க முடியாது.

கையைக் கழுவித் துடைத்துக் கொண்ட பின் மௌனமாக வெற்றிலை பாக்கு போட்டுக் கொண்டோம். கிருஷ்ணமூர்த்தியும் அவன் மனைவியும் ஒரு வார்த்தை பேசவில்லை. பேச முடிய வில்லை என்று கூறுவதுதான் சரி.

“நான் கிளம்பட்டுமா?'' என்று எழுந்தேன். அவனும் எழுந்தான். செயலற்றவனாகச் சரி என்று கூறுவது போலக் கையைக் கூப்பினான். ஒரு நாளும் அவனிடம் அவ்வளவு எளிதாக விடை பெற்றுக் கிளம்ப முடியாது. எட்டு மணிக்குக் கிளம்ப நான் எழுந்தால் ஒன்பதரை மணிக்குத்தான் என்னை விடுவிப்பான். இன்று அவன் ஒன்றுமே இயலாத அசக்தனாக இருந்தான்.

நான் வாசற்படியையும் தாண்டித் தெருவில் அடியெடுத்து வைத்தேன். கிருஷ்ணமூர்த்தியைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது.

“கதாசாகரர் சதுரங்கா ரொம்பச் சுலபமாகத் திருப்திப்பட்டு விடுவார், இல்லையா?” என்றேன்.

கிருஷ்ணமூர்த்தியின் புன்னகை ஒரு பலவீன முயற்சியாக இருந்தது.

“நான் எடுத்ததற்கெல்லாம் பிரமாதம், அற்புதம் சொல்லி விடுகிறவன் என்று சதா கேலி செய்து கொண்டே இருந்தாயே? இன்று பார்த்தாயா? மாறுதலாக ஒரு சொல் சொல்லி முடிப் பதற்குள் எவ்வளவு விபரீதங்கள் நிகழ்ந்து விட்டன?”

கிருஷ்ணமூர்த்தி என்னையே பார்த்த வண்ணம் நின்றான்.

“விபரீதங்களைத் தவிர்க்கத்தானப்பா நான் குறையாக ஏதும் சொல்லுவதில்லை.”

நான் செய்தது சரி என்றுதான் எனக்குக் கடைசி வரையில் தோன்றிற்று. ஆனால் கிருஷ்ணமூர்த்தி இன்னொரு முறை எனக்கு விருந்து வைக்கவில்லை.

1983